Regd. No 2975

ஸ்ரீ:

# ஸ்ரீராமானுஜன் -391, 392

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர், மஹாவித்வான்

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya:*

P.B. ANNANGARACHARYA, Kanchipuram-631503

வருடச் சந்தா ரூ 10

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து

துன்மதி ௵ சித்திரை ௴

# ஸ்ரீராமாநுஜன்-391, 392



ஆசிரியர்:
ஸ்ரீ காஞ்சி மஹாவித்வான் P. B. அண்ணங்கராசாரியர்

| | | |
|---|---|---|
| தொகுதி 33 | ரௌத்ரி ஹு பங்குனி மீ<br>1981 ஏப்ரல், மேமீ | பகுதி 11, 12 |

## பத்ராதிபப்ரதிநிதியின் அறிவிப்பு

(கி அ. அனந்தாழ்வான்)

ஸ்ரீ ஸ்வாமிக்கு ஸமீபத்தில் நடந்த ஜன்மநக்ஷத்ரோத்ஸவத்திற்குப் பெரும்பாலும் நாற்றிசையிலிருந்தும் ஸ்வாமிகளும் அன்பர்களும் சிஷ்யர்களும் விஜயம் செய்திருந்தபடியால் ஸ்வாமியின் திருமேனி நிலைமையை அறியாதார் பெரும்பாலுமிலர் என்றே சொல்லலாம் பிராயத்துக்கேற்ற அசக்தியே தவிர ஒருவிதமான பிணியுமில்லை திருக்கண்பார்வையில் சிறிது அபாடவம் ஏற்பட்டிருந்தாலும், அடியேன் போல்வாரைத் துணைகொண்டு எதையும் குறையற நிர்வஹித்துக் கொண்டே வருகிறார். ஸ்ரீராமாநுஜனை நிறுத்தாமல் நடத்திவரவேணுமென்று அடிக்கடி ஸாதித்துவருகிறார். சந்தாதாரர்களின் உதவியை எதிர்பாராமல் இரண்டு மூன்று மாதங்களுக்கொருமுறையாவது நடத்தியேவர வேண்டுமென்று நியமித்திருக்கிறார்.

### திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை

## அருளிச்செயல் வடசொல்விளக்கின் ஸமாப்தி

இச்சிறுநூல் ஒருவாறு முடிவுபெற்று இவ்விதழில் வெளியிடப் படுகின்றது: வடசொற்களை தேவநாகராக்ஷரத்தில் அச்சிடத் தொடங்கினபடியால் அதற்கு ஸௌகரியமான அச்சுக்கூடம் த்ருப்திகரமாகக் கிடைக்காத காரணத்தினால் இப்போது நிகழ்ந்திருக்கும் முத்ரணம் பரிபூர்ணத்ருப்தியுடன் முடிவு பெறவில்லையென்னலாம். விரைவில் த்ருப்திகரமான மறுபதிப்பு அமையும். இதில் குதூஹல முள்ளவர்கள் பலபலர் என்பதையறிகிறோம்: அன்னவர்கள் ஸ்வல்பகால விளம்பத்தில் பூர்ண த்ருப்திபெறப் பேரருளாளன் அருள்புரிக. — ※

## பகவத்ராமாநுஜ க்ரந்தமாலையைப்பற்றி

எம்பெருமானார் அருளிச்செய்த ஸ்ரீபாஷ்யம் முதலான ஸகல க்ரந்தங்களையும் நாற்பது வருஷங்களுக்குமுன் தெலுங்குலிபியில் அச்சிட்டோம். பிறகு சில வருஷங்கள் கழித்து, ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி (வைகுண்டவாஸியான) த்ரிதண்டி ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமியின் நியமனத்தினால் அதை தேவநாகர லிபியிலும் அச்சிட்டோம், அது அந்த ஜீயர் ஸ்வாமி ஸந்நிதியிலே ஒப்படைக்கப்பட்டபடியால் அபேக்ஷகர்கள் அந்த ஜீயர் ஸ்வாமியின் க்ரந்தாலயத்திலிருந்தே பெற்றுக் கொள்ளவேண்டியதாகும்.

(விலாஸம்) **வாஸுதாஸாச்ரமம்,**
Nadigaddipalam, (Tsundur PO)
Guntur, Dt., A. P

தெலுங்கு லிபியில் அச்சிட்டதுமட்டும் நமது க்ரந்தமாலா கார்யாலயத்தில் கிடைக்கும். விலை ரூ. **25**.

இப்படிக்கு,
**கார்யதர்சி.**

ஸ்ரீரஸ்து:

# மேலையார் செய்யாதன செய்வோம்

ஸ்ரீமந்நிகமாந்த மஹா தேசிகனருளிச்செய்த
ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் க்ருதக்ருத்யாதிகாரத்தில்;

"அநாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கனமடியாக வுண்டான பகவந் நிக்ரஹத்தாலே ஸம்ஸரித்துப்போந்த நமக்கு அவஸர ப்ரதீக்ஷையான பகவத் க்ருபையடியாகவுண்டான ஸதாசார்ய கடாக்ஷவிஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரணாநுச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்த பின்பு சரண்யப்ரஸாதனங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே நிக்ரஹஹேதுக்களை யெல்லாம் க்ஷமித்துத் தீர்ந்தவடியவர்தம்மைத் திருத்திப்பணி கொள்ளவல்ல ஸர்வசேஷியான ச்ரியப்பதி தன்பேருகத் தானே ரக்ஷிக்குமென்று தேறி நிர்ப்பரனாயிரு என்கை, இது மாசுச: என்கிற சரண்யவாக்யத்திலும் தீர்ந்த பொருள்'' என்றருளிச் செய்யப் பட்டுள்ளது.

இதில் பகவத்க்ருபைக்கு "அவஸரப்ரதீக்ஷயான'' என்று விசேஷணமிட்டருளினதை ப்ராமாணிகர்கள் விவரிக்கப் புகுந்தால் ஸ்ரீவசந பூஷண திவ்ய சாஸ்த்ரத்தில் த்ரிபாத்விபூதி ப்ரகரணத்தில்;—

"... நன்மையென்று பேரிடலாவதொரு தீமையுங்காணாதே நெற்றியைக் கொத்திப் பார்த்தால் ஒருவழியாலும் பசைகாணாதொழிந்தால் அப்ராப்யமென்று கண்ணநீரோடே மீளுவது, தனக்கேற இடம் பெற்றவளவிலே 'என்னூரைச் சொன்னாய், என்பேரைச் சொன்னாய், என்னடியாரை நோக்கினாய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய் அவர்களுக்கொதுங்க நிழலைக்கொடுத்தாய்' என்றாப்போலே சிலவற்றை யேறிட்டு மடிமாங்காயிட்டு, பொன்வாணியன் பொன்னை உரைகல்லிலே யுரைத்து மெழுகாலே யெடுத்துக் கால்கழஞ்சென்று திரட்டுமாபோலே ஜந்மபரம்பரைகள்தோறும் யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிகம் என்கிற ஸுக்ருத விசேஷங்களைக் கல்பித்துக்கொண்டு அவனே அவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக்கொண்டு போரும்'' என்றுள்ள

திவ்ய ஸூக்திகளைக்கொண்டு ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீமதாண்டவன்போல்வார் கர்ணாம்ருதமாக விவரித்தருள்வர்கள்; ஸ்ரீமதாண்டவன் பூர்வாச்ரமத்திலே ஒருகால் விவரித்தருளக் கேட்டிருந்ததுமுண்டு முப்பது வருஷங்களுக்கு முன்பு நம்பெருமாள் ஸன்னிதியில் நடைபெற்ற ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவத்திலென்று ஞாபகம். இது நிற்க.

முன்னம் உதாஹரித்த ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார ஸ்ரீ ஸூக்திகளுக்கு ப்ரதிச்சந்தமாக சரணாகதிகத்ய பாஷ்யாவஸாநத்தில் அருளிச் செய்துள்ள ஸம்ஸ்க்ருத ஸ்ரீஸூக்திகள் இவை;—

> "ஏதேந அநாதிகாலச் அஜ்ஞாதிவங்கநமூல பகவத் அப்ரஸாதேத ஸம்ஸரதோ மே பகவத் க்ருபா மூல ஸதாசார்யாங்கீகாரேணே த்வயோச்சாரணாநுச்சாரண பூர்வக ஸ்வ ரக்ஷாபரந்யாஸே ஸித்தே ப்ரஸாதநேஷு அஸ்மாத் அப்யதிகஸ்ய அபாவாத் ஸ்வீக்ருதபர: ச்ரிய:பதிர் நாராயண: காலத்ரயவர்த்திந: ஸர்வாந் அப்ரஸாதஹேதூந் யதார்ஹம் க்ஷாந்த்வாஸ்வயமேவ ஸ்வார்த்தமேவ மாம் ஸ்வஜ்ஞாநதர்சந ப்ராப்த்யாதிப்ரதாநேந ரக்ஷிதிதி விச்வஸ்தோ நிர்ப்பரோ நிர்ப்பயஸ் ஸந்துஷ்டோ பவேதி நிகமிதம் பவதி" என்பன.

ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார க்ருதக்ருத்யாதிகார ஸ்ரீஸூக்திகளுக்கும் இந்த கத்யபாஷ்ய ஸ்ரீஸூக்திகளுக்கும் பாஷாபேதமாத்ரமேயொழிய விவக்ஷிதார்த்தபேதம் சிறிதுமில்லையென்பது ஸுவ்யக்தம்.

"சரண்யப்ரஸாதநங்களில் இதுக்குமேற்பட வொன்றில்லாமையாலே" என்று தமிழிலும், "ப்ரஸாதநேஷு அஸ்மாத் அப்யதிகஸ்ய "அபாவாத்" என்று ஸம்ஸ்க்ருதத்திலும் அந்யூநாநதிரிக்தமாக அருளிச்செய்திருப்பதை விசேஷித்து நோக்கியருளவேணும். சரணாகதி கத்யபாஷ்ய ஸ்ரீ ஸூக்திகள் முந்தினவையா? ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார ஸ்ரீ ஸூக்திகள் முந்தினவையா? என்பதை ஸத்ஸம்ப்ரதாய ஸித்தர்கள் நிர்ணயிப்பது இந்த ஸந்தர்ப்பத்தில் "மேலையார் செய்யாதன செய்யோம்" என்பதைச் **செய்யாதன செய்வோம்** என்று திருத்தி ஸேவிப்பது நலமல்லவா? பகவத்பாஷ்யகாரர் இன்ன ஆசார்யரிடத்தில்

இன்னது ஸேவித்தருளினரென்பதை விவரித்தருளிச்செய்யா நின்ற ஸ்வாமி தேசிகன், ஸ்ரீராமாயணம் ஸேவித்தது இன்னாரிடத்தில், திருவாய்மொழி கேட்டருளினது இன்னாரிடத்தில், ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித்தது இன்னாரிடத்தில் ——— என்றருளிச் செய்தவிடங்களில் இந்த நூதநாநுஷ்டானம் பெற்றது இன்னாரிடத்தில் என்றருளிச் செய்யக் கண்டிலோம் "இதற்குமேல் ஒன்றில்லாமையாலே" என்றருளிச் செய்ததையே காண்கிறோம். ஆகவே ×**செய்யாதன செய்வோம்** என்கிற அநுஸந்தானம வரம் — .... (தொடரும்)

---

# ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியும் தேசிக திவ்யஸூக்தியும்

---

ஆளவந்தாரருளிச்செய்தருளின கீதார்த்த ஸங்க்ரஹத்தில்' —

"நிஜகர்மாதிபக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவகாரித:,
உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபீ:"

என்கிற சுலோகத்தின் (கீதார்த்த ஸங்க்ரஹ) ரக்ஷையில் ஸ்வாமி தேசிகன் அருளிச்செய்தருளின ஸ்ரீஸூக்திகள் இவை;—

"முக்தவ்யாபாரந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத்வாந் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவிபலஸாதந த்வாநுபபத்திதர்சநாச்ச நாஸ்ய ஸவவ்யாபாரே மோக்ஷோபாயதாபுத்திரபி ஸ்யாதிதிபாவ:" என்றுள்ளன.

இவை தேசிக திவ்ய ஸூக்திகள். இங்கு "முக்தவ்யாபாரந்யாயேந" என்றதன் ஸ்வாரஸ்யத்தைக் குறிக்கொள்வவேணும்- "ப்ரபதநே" என்னாமல் "ஸ்வவ்யாபாரே" என்றமையால் இந்த அல்பசேதநன் எது செய்தாலும் அதை உபாயமாக எண்ணலாகாது என்றதாகத் தேறவில்லையா! "ப்ரபத்தியுங்கூட உபாயமன்றென்று சிலர் அதிவாதம் பண்ணினார்கள்' என்று ஒருபக்கத்திலுள்ளது;ஸாரஸாரமென்கிற ரஹஸ்யத்திலும், ×ஹேதுர் வைதே விமர்சே பஜந வதிதரத்× என்றவுடனே கிந்து அநுஷ்டாநகாலே× என்கிற அத்புதஸூக்தி விந்யாஸத்தாலும்



ஸ்வயமேவ ஸமீக்ருதமாகையாலே நாத்ர விஸ்தராவகாச; 'நாஸ்ய ஸ்வவ்யாபார உபாய;' என்னுமல் "உபாயதாபுத்திரபி ந ஸ்யாத்" என்றருளிச்செய்திருந்தும் தேசிகன் செய்யக்கூடாதென்றதை நாம் செய்யலாமா? என்று சிந்தியாதவர்கள் செய்யாதன செய்யோம் என்றநுஸந்தியாதொழிவது அபராதமல்லவா? "அநுதாபாத் உபரமாத் ப்ராயச்சித்தோந் முகத்வந;, தந் பூர்ணச்சாபராதாஸ் ஸர்வே நச்யந்திபாதச" என்கிற தேசிக திவ்யஸூக்திப்படியே அபராத பரிஹாரம் செய்ய வடுக்கும், அநுதாப-உபரமங்கள் மட்டும் செய்தாலும் பர்யாப்தமே. அர்த்தமில்லாமல் எதையாவது எழுதிக்கொண்டு போதைப்போக்குவதும் ப்ரியாபாதுகைகளைப் பாழாக்குவதும் செய்யாதொழிந்தால் உய்யுமாறெண்ணினவாரும். .... .... ....

(தொடரும்)

## "பௌநஃபுந்யம் நிவாரயந் ஹஸ்த:"

ஸ்வாமி தேசிகன் அருளிச்செய்த அபயப்ரதாந ஸாரத்திற்கு மங்களச்லோகமாக அருளிச்செய்தது;—

"ப்ராய ப்ரபதநே புப்ஸாம் பௌந:புந்யம் நிவாரயந், ஹஸ்த: ஸ்ரீரங்கபர்த்துர் மாம் அவ்யாத் அபய முத்ரித:" என்னுமிந்த சுலோகரத்நம். இதில் **ப்ரபதநே** என்கிற பதத்தில் மூன்றுமக்ஷரம் தவர்க்க ப்ரதமமா? தவர்க்கத்ருதீயமா? என்னும் விசாரம் ஸமீபத்தில் திருநாராயணபுரத்தில் நடத்த வைரமுடி மஹோத்ஸவத்தில் ப்ரஸக்தமாகிப் பெரிய விவாதத்தில் முடிந்ததாக ஒருவர் தெரிவித்துள்ளார். தவர்க்க

ப்ரதமாக்ஷரமாகக் கொண்டால், தரையில் விழுந்து ஸேவிப்பதிலே என்று பொருளாகிறது. தவர்க்கத்ருதீயமாகக்கொண்டால் 'ப்ரபத்தியிலே' என்று அர்த்தமாகிறது. அலம் என்று ஸூசிப்பிக்கிற ஹஸ்த முத்ரையானது ப்ரவ்ருத்திரூப கார்ய விசேஷம் நடைபெறுமிடத்துப் பயன்படுமேயல்லது நிவ்ருத்திஸ்தலத்தில் பயன்படாது. ததீயாராதநம் நடைபெறுமிடங்களில் வடை, லட்டு, போளி முதலான பக்ஷ்யங்களை ஒருவிசை பரிமாறிவிட்டு மறுவிசை பரிமாறவந்தால் அப்போது சிலர் வாய்கொண்டு வேண்டா வேண்டா வென்பர்கள்; சிலர் வாசாமறுக்காமல் ஹஸ்த சேஷ்டயா மறுப்பர்கள். இஃது இற்றைக்கும் எங்குங் காண்பதாகும். பக்ஷணங்களை ஸாதிக்கவராதபோது பௌநःபுந்யநிவாரக ஹஸ்த சேஷ்டை பண்ணுவதற்கு ப்ரஸக்திலேசமுமில்லை. நிலத்தில் விழுந்து ஸேவிக்கையாகிற பதநம் ப்ராப்தமாகும்போதுதானே ஹஸ்த முத்ரைக்கு உபயோக முள்ளது.

ப்ரபத்தியின் வேஷத்தை ஸ்வாமி தாமே ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் "இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வப்ரத்யயாத்மிகா" என்கிற காரிகையினால் ஸுவ்யக்தமாகவருளிச்செய்தார். *த்வய்யேவ த்வதுபாயதீ: இத்யாதிகளாலும் கேவலம் அத்யவஸாய விசேஷரூபமாக நிர்ணீதமான ப்ரபத்தியின் ஆவ்ருத்தியை ஹஸ்த சேஷ்டையினால் நிவாரணம்பண்ண ஸாத்யமாகுமோ? என்று புத்திமான்கள் விமர்சிக்க வெளிதே.

அநாதியான ப்ரபஞ்சத்தில் எந்த ஆசாரமும் நவீனமன்று, தேசிகன் முதலான நம் பூருவாசாரியர்கள் கொண்டிருந்த ஆசாரத்தையே எங்கும் யாவரும் கொண்டிருந்தார்கள் என்னவொண்ணுமோ? சிலர் பலகால் விழுந்தெழுவதோடு நில்லாமல் தொப்பைக்கணம் போடுவதும் கபோலத்தில் குட்டிக்கொள்வதுமான ஆசாரங்களை எங்கும் காண்கிறோமன்றோ. தந்நிவாரணம் பண்ணுவதாக ஒரு உத்ப்ரேக்ஷை அமைந்தபடி

ஸ்ரீ வைகுண்ட கத்யத்திலே "ப்ரணம் யோத்தா யோத்தாய புந: புந: ப்ரணம்ய" என்றது ஓரிடத்திலேயே நின்று கொண்டு செய்வதைச் சொன்னபடியன்று. "முன்னே "தூராதேவ" என்றிருக்கையாலே ப்ரணாமபரம்பரைகளாலே வழியைக் கடக்கும்படியைச்

சொன்னவாறு, திருவாராதன ப்ரயோகத்தில் (நித்யத்தில்) ''ப்ரணம்ய உத்தாய'' என்றருளியதைக்கண்டு தெளிவது.

ஸ்வாமியெம்பெருமானர் திருக்கோட்டியூர் நம்பியை ஸேவிக்க அங்கு எழுந்தருளினபோது ஓரிடத்தில் நின்றுகொண்டு ''நம்பி திருமாளிகை எங்குள்ளது' என்று வினவியருள 'அதோ தெருக்கோடியில்' என்று சிலர் காட்ட, பிறகு திருவடிகளால் நடந்து செல்லாமல் ப்ரணம பரம்பரைகளினலேயே நம்பி திருமாளிகைக்குச்சென்று சேர்ந்ததாக இதிஹாஸமுள்ளது. வைகுண்டகத்யத்தில் ×உத்தாயோத்தாய புந: புந: ப்ரணம்ய× என்றருளிச்செய்தவர், நித்ய க்ரந்தத்தில் ''ப்ரணம்யோத்தாய'' என்றருளிச்செய்ததை நோக்கினல் போதுமே.

ரகுவர்சகாவியத்தில் நான்காம் ஸர்க்கத்தில் ×வங்காந் உத்காய தரஸா× ஆனபின்பு;—

'அபநீதசிரஸ்த்ராணச் சேஷாஸ்தம் சரணம் யயு:, ப்ரணிபாதப்ரதீகாரஸ் ஸம்ரம்போ ஹி மஹாத்மநாம்'' என்றுன் காளிதாஸகவி; முன்னம் சரணம் யயு: என்றதையும், பின்பு ப்ரணிபாத என்றதையும் நோக்கினல், ப்ரபதநே என்பதில் தவர்க்க ப்ரதமமும் த்ருதீயமும் அவிசேஷமென்று அறுதியிடலாகும், ×தேந தத்புரத: பாத × என்பதொன்றுண்டே, அது தான் இங்கு பௌந:புந்ய நிவாரணலக்ஷ்யபூதமென்னத்தட்டில்லை. இது, திருநாராயணபுரம் வித்வான்களுக்குத் தெரிவித்தது ×மேலையார் செய்யாதன **செய்யேலோ** மென்றிருக்கும் ஸஹ்ருதயஸுஹ்ருந்மணிகளுக்கும் தெரிவித்ததாகும்.

ஸ்வாமி தேசிகன் அருளிச் செய்த முதல் ரஹஸ்யமான ஸம்ப்ரதாய பரிசுத்தியில்— '' ×பாஷ்யகாரருடைய சிஷ்யஸம்ப்ரதாயங்களில் ஒன்றிலும அர்த்தவிரோதமில்லை; வாக்யயோஜநாபேதமேயுள்ளது. தேசகால அவஸ்தா விசேஷங்களாலேவரும் அநுஷ்டாந வைஷம்யம் சாஸ்த்ராநுமதம்'' என்றுள்ளது, இதை நிதர்சநங்களுடன் வியாக்கியானிக்கவல்லாராருமில்லை ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்திலும்—''இத்தமர்த்தா விரோதேபி யோஜநாமத்ர பேதத:, ப்ராசாம் விவாதஸ் ஸம்வ்ருத்த: பாஷ்யகாரை: அவாரித:'' என்றுள்ளது. இத்தகைய பரமஸாத்விக ஸூக்திகளைக் கணிசிப்பாரில்லை, — (தொடரும்)

# மீன விசாக மஹோத்ஸவ வைபவம்

(தி; அ, அனந்தாழ்வான்)

ஸ்ரீமதுபயவே பத்ராதிப ஸ்வாமியின் தொண்ணூறுவது திருநக்ஷத்ரபூர்த்தி அவர்தம் திருமாளிகையில் 16—3—81முதல் 25—3—81 வரை மிக விமரிசையாக நடைபெற்றது. அந்த மஹோத்ஸவ ஸமாரோஹ ஸமாபந வர்ணந முகமான அடியேனுடைய சொற்பணியாகிய நற்பணி அடியார்க்கு இன்பந்தர இறையருளை இறைஞ்சுகின்றேன். இவ்வினைய புன் கவிதையில் காணும் குற்றங்களைப் பொறுத்தருள்க.

1 சீர்கொண்ட செழுமறையைச் செம்மையுறச் செப்பிடவே
நீர்கொண்ட கருமுகிலை நனியொக்கும் நற்றிருமால்
பேர்கொண்ட பிரமனெனும் பெருந்தேவன் தனையுந்தி
ஆர்கின்ற மலரதனில் அருமலராய் அமைத்தனனால்

(கருத்து) பிரதிபலனை எதிர்பாராமல் மழை பொழிந்து உலகைக் காக்கும் மேகத்தையொத்த நெடுமால் உந்தியெழுந்த உருவ மலர் தன்னில் மறைபகர நான்முகனை முன்னம் படைத்தனன்,

2 நீர்சூழ்ந்த வியனுலகில் நிலவிருள்தான் நீங்கிடவே
தார்சூழ்ந்த தடவரைத்தோள் தரைமகளார் தனிக்கேள்வன்
ஏர்சூழ்ந்தே எதிரொன்றிலா எழில் நகரிதனில்வகுளத்
தார்சூழ்ந்த சடகோபச் சுடர்தனையே தோற்றினனே.

(கருத்து) கடல் ஞாலத்து அளிமிக்க கருமால் இந்த வுலகினிருள் நீங்க வளவயல்சூழ் வண்குருகூரில் நம்மாழ்வாரை அவதரிப்பித்தருளினன், மலரதனில் தோன்றிய பிரமன நான்கு முகங்களையுடையவன். மலருலகில் தோன்றிய மாறனும் தன்பேச்சு, தாய், தோழி, மகள் பேச்சுக்களால் உண்டான நான்கு முகங்களையுடையவன் என்க.

3 அருமறைகள் இரண்டினையும் அடைவுடனே யதிகரித்துப்
பெருமைமிகத் தொல்லுலகில் பேராது நரட்டுதற்கே
தருமமிகு காஞ்சிதனில் தவநெறியோர் குலவிளக்காய்
அருமையென அண்ணங்க ரசரியர்தாம் தோன்றினரே.

3

(கருத்து) அருமறையினையும் அந்தமிழினின்பப் பாவினையும் பொலிவுறச் செய்யத் திருவுளங்கொண்ட ச்ரியஃபதி ஸ்ரீகாஞ்சியில் ஸ்ரீஸ்வாமியை அவதரிப்பித்தானென்க.

தருமமிகு காஞ்சி—ஸத்யவ்ரத க்ஷேத்ர மென்றவாறு.

4 மலருலகம் தான் படைக்கும் மறையோது மம்புயத்தோன்
கலைமடந்தை திருநாவில் களிநடந்தான் புரிந்திடவே
நிலையெனவே எண்கண்ணால் நெடுமாலை ஏத்திடுவோன்
இலையெனவே சாற்றிடுவோம் ஈங்கிவனை யொப்பதுவே

(கருத்து) மலரோனும் மாறனும் ஓருருவு கொண்டதுபோல் விளங்கும் ஸ்ரீஸ்வாமி இவ்விருவரையும் ஒப்பதை இரண்டு செய்யுட்கள் விளக்கும். நாட்டைப் படைக்கும் அயன் அளிமலர் மேலிருந்து மறை கொண்ட மந்திரத்தால் வாழ்த்துபவன் என்பதும் நாபதி என்பதும் எழிற் கண்கள் எட்டினோடும் அருளை யீயென்று தொழுதேத்துமவன் என்பதும் யாவருமுணர்ந்ததே. இனி ஸ்ரீஸ்வாமி பரமான பொருள் கேண்மின். இம் மலர்தலை மாஞாலம் நோன்புநோற்று வேதம் வல்லாரான ஸ்ரீஸ்வாமியைப் படைக்கும் என்க. (அம்புயத்தோன்) அழகிய புயத்தை யுடையவர், தீயிற் பொலிகின்ற செஞ்சுடராழி திகழ் திருச்சக்கரத்தின் கோயிற்பொறியாலே ஒற்றுண்டதனால் உண்டான அழகு. வகுளதர ஸரஸ்வதியான திருவாய்மொழி யநுஸந்தான முடையவர். கண் என்று சொல்லப்படும் மெய்யறிவால் எம்பெருமானை ஏத்துமவர் என்க, இவ்வகையால் ஒப்புமையுண்டெனினும் ஆராய்ந்தால் ஸ்வாமிக்கு ஒப்பில்லை என்றே துணியவமையும்,

5 நதிக்கரையில் நானிலந்தான் நலமுறவே வ வினையை
மதிக்கவென மாசில்சீர் விசாகமதில் வந்துதித்துப்
பதிக்கவரும் பைந்தமிழால் பொருளுரைத்துப் பாருலகோர்
துதிக்கவரும் தொல்லரவின் துளிரடியைச் சேர்ந்தவனே.

(கருத்து) ஒருகால் ஸ்ரீஸ்வாமியை சந்தச்சதுமுகனோடு ஒப்பிட்டு மீட்டும் செந்தமிழ்ச்சதுமுகனும் நம்மாழ்வாரோடு ஒப்புமை கூறந் துணிவன்என்க.வல்வினைப்பாசம் கழற்றபொருநல்துறையில் சித்திரைக் கடுத்த மாதத்தில் ஏரார் விசாகத்தில் வந்துதித்து ஆதிசேஷாம்சமான

திருப்புளி நிழலிலேயமர்ந்து அந்தமிழால் ஐம்பொருள் (அர்த்த பஞ்சகம்) உரைத்தவர் நம்மாழ்வார்.

பாலாற்றங்கரையில் சித்திரைக்கு முந்திய பங்குனியில் நல் விசாகத்தில் தோன்றி திவ்யார்த்ததீபிகை போன்ற எண்ணிலாத நூல் களையருளி ஆதிசேஷாம்சரான ஸ்ரீமணவாள மாமுனிகளின் திருவடியான வாதிபீகர மஹாகுருவம்சத்துத் தீபம் நம் ஸ்வாமி என்க.

6 அருங்கரையாம் தருவேறி அவனிமகள் தன்புகலாய்
நெருங்க வன்புற்றுறைந்திசையின் நல்யாழால் மகிழ்வெய்தி
அருங்கதையை இளஞ்சிறுரும் ஆதரவாய் இசைக்கவருள்
கருங்குயிலாம் காமருசீர்க் கச்சிநகர் முனிவரனே.

(கருத்து) திருவயிறு வாய்த்திருந்த மிதிலைச்செல்வியைச் சிலையினாலிலங்கை செற்றதேவன் ஆராவன்பிளையவனோடும் அருங்கானம் அடைவித்தபோழ்து இலக்குமணனும் பிரிந்தேகப் புற்றினின்றும் போந்த புண்ணியனை வான்மீகி முனிவன் அன்னைக்கு அடைக்கலமீந்தனன் பின்னர் மஹதீ என்னும் சொல்லுயர்ந்த நெடுவீணைதடவும் திடமொழி மறைவாணன் சேமமுடை நாரதன்வாய்க் கார் கலந்த மேனியான்தன் சீர்கலந்த கதை கேட்டுணர்ந்து, லோக பாலகன்றன் பாலகர்களான குசலவர்கள் இன்னிசைக்கும் பொருட்டு ''பாட்யே கேயே ச மதுரம்'' எனப்படும் எம்பெருமான் தன் சரிதையை 'ஆருஹ்ய கவிதா சாகாம்' என்னும்படியே காவியமாகச்செய்து கூவியவன் வால்மீகி கோகிலம் என்க (இனி ஸ்வாமிபரமாக) அறவோரையே புகலாக வுடையவள் பூமாதேவியாதலின் அறந்திகழும் மனத்தவரான ஸ்ரீஸ்வாமி பூமாதுக்கு ஆச்ரயர் என்க. ''உன் தொண்டர்கட்கே யன்புற்றிருக்கும்படி'' என்றபடியே ஸ்ரீ வைஷ்ணவ தாஸ்யத்திலே நிலைநின்றவர் ஸ்ரீஸ்வாமி. யாழினிசை வேதத்தியலாம் திருவாய் மொழியைக் கேட்டுகப்பவர். ஸ்ரீ வால்மீகி ராமாயணத்தைச் சிறுவர்களும் பாராயணம் செய்துய்யும் வண்ணம் எளிய இனிய தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டருளும் சீலமுடையவர் ஸ்ரீ ஸ்வாமி என்க.

7 நாற்றிசையும் நாரணன்றன் நலமிகு நாமம்பரப்பிக்
காற்றெனவே கடுவினையைக் காதங்கள் துரந்தோட்டி

ஆற்றலெலலாம் அருளிச்செயல் அருந்தொண்டுக்கே யாக்கி
மாற்றமெலாம் மாய்ந்தொழியும் வகைசெய்யும் மாண்பினனே

8 மிக்கவருள் கொண்டுலகோர்மீது மிகுங் கேள்வியினால்
தக்கவருஞ் சொற்களினால் தமிழ்மாறன் கருத்துரைத்துத்
தக்கவராம் நம்பிள்ளை தம்மொடவர் சீடர்க்கும்
மிக்கபெருங் கற்கோயில் மேவு சொற்கோயிலும் அமைத்தான்.

(கருத்து) அயர்வறுமமரர்களதிபதியின் துயரறு சுடரடி நிழலில் ஸ்ரீ நம்பிள்ளைக்குக் கற்கோயிலும் கலிவைரி குருஸ்துதி போன்றவற்றால் சொற்கோயிலும் அமைத்திருப்பவர் ஸ்ரீ ஸ்வாமி என்றவாறு.

9 பேராயிரம் கொண்டோன் பேராதேயணைந் திருக்கச்
சோராதே யடிமையெலாம் செய்கின்ற சீரனந்தன்
ஓராயிரம் வாயால் ஓதரிய வடியர்புகழ்
ஓராவிவ்வனந்தன் தன் ஓர்நாவுக் கிலக்காமோ?

(கருத்து) ப்ரக்ருஷ்ட விஜ்ஞான பலேக தாமனான திருவனந்தாழ்வானுக்கும் தொண்டர் பெருமை சொல்லவரிதானால் நுண்ணுணர்வில்லாச் சிறிய இவ்வனந்தனால் அப்பெருமை சொலப்போமோ என்றவாறு.

10 மூன்று முப்பதாண்டுகள் தாம்நிறைவதெய்து கின்றதால்
மூன்றுமூன்று நாட்கள் தம்மொடோர் நாள்சேர்ந்து முன்னம்போல்
மூன்றுதத்துவக் குலத்தோர் முதல்வனாகும் வித்தகன்
தோன்றுகின்ற நாளையேத்தத் தொண்டரேத்த உன்னுவார்.

(கருத்து) மூன்று முப்பதாண்டுகள் — தொண்ணூறாண்டுகள். (மூன்று மூன்று நாட்கள் ) ஒன்பது நாட்கள் உபயவேத பாராயணமும் பங்குனி விசாக நன்னாளன்று சாற்றுமுறையும் நிகழ்வதைக் குறித்தது (மூன்று தத்துவக் குலத்தோர்) சித், அசித், ஈச்வரன் என்னும் மூன்று தத்துவக் கொள்கையுடையோர்.

11 தென்னண்டை வீதிதனில் திகழ்திரு மாளிகையதன்முன்
தென்னன்தன் தமிழேபோல் துயர்நீக்கிச் சாயளித்து
மின்னுகின்ற வெயிலால் வரும்வேதனையும் தீர்ந்திடவே
தன்னடைந்தார் தமையளிக்கும் தனிப்பந்தர் தனை யமைத்தார்.

12 பன்னிரு வராமாழ்வார் பன்னுகலை வடமறையும்
பன்னருஞ்சீர் ஆசிரியர் பணித்த துதிநூல்களையும்
பன்னகமும் படம்விரித்தே பயில்நடந்தான் செய்யும்வகை
பன்னுகின்ருர் பாருய்யப் பண்பாளர் பலராவார்.

(கருத்து) கோஷ்டியின் சிறப்பை வெளியிடுவதாமிது.

13 அமர்ந்தவர்கள் தம்மிடத்தே அமர்ந்திருக்கும் தாபமெலாம்
அமர்ந்தசுவை யாழ்வார்கள் அரும்பாவால் அழியுமன்றே
திமிர்ந்தவர்கள் மேல்நோக்கில் நீளாழி மின்விசிறி
தமர்களுடைத் தவிராத தாபந்தான் தீர்க்குமன்றே.

(கருத்து) தாபத்ரயங்கள் ஆழ்வார்கள் அரும்பாவை அநுபவிப்ப வர்களிடத்தே அரும்பா என்றவாறு. அருளிச்செயலில் ஈடுபட்டு அத ஞல் மார்பு நெறித்திருப்போர்மீது அருள் நோக்கைச் செலுத்தும் எம் பெருமானது மின்வட்டச் சுடராழி. (எப்போதும் கைகழலா நேமியான் நம்மேல் வினை கடிவான்) கோடைக்காலத்து வெப்பம் மின் விசிறியால் அழியும் என்று மற்றொரு பொருளும் தோன்றக் காண்க. (நீளாழி மின் விசிறி—நீண்டு ஆழ்ந்துள்ள Electric Fan)

14 திருக்கோட்டி தனில்திகழும் திருவுடையார் தம்நடுவே
திருக்கோட்டித் தீவினைகள் தீர்ந்திடவே யருள்செய்யும்
திருக்கோட்டியூர் நாதன் திருவடியே யெனவந்தேன்
திருக்காட்சி தந்திடுவான் திருவுடையீர் சேருமினே.

(கருத்து) மனமாசு தீர்க்கும் ஸ்ரீஸ்வாமி கோஷ்டியில் எழுந் தருளியிருப்பதைப் பற்றியதாமிது.

15 ஆழியெலாந் தான்பொருந்தி ஆர்த்தபுகழ் தன்னுடனே
கேழென்றிலா மின்னிலகிக் கேடில்சீர் மாலுற்று
வாழுமவர் மதிப்புயர்த்தி வடிவாலே வசிகரிக்கும்
தாழ்வில சீரண்ணங்கார் தாம்திகழக் கண்டனமே.

(கருத்து) காருக்கும் (மேகம்) காருக்கும் (Car) அண்ணங் காருக்கும் உள்ள ஒற்றுமைநயம் அறிந்தின்புறற் பாலது (1) (ஆழி)

புவியினில் புனிதராம் தேவரும் நசைகொளச்
சவியுடைச் சாலேயில் ததியர் ஏற்பரே.

(கருத்து) ஸ்ரீ ஸ்வாமி திருமாளிகையில் எம்பெருமான் கண்டரு ளும் இன்னடிசிலேத் ததியர் அமுது செய்கையில் பாற்கடலிற் கிளர்ந்த அமிழ்தினையுடைய தேவர்கள் தம்முடைய அமுதத்தினை மறந்து இவ் வமுதை வேண்டுவர் என்றதாயிற்று. பக்தாம்ருதம் அன்றோ இது. (சவியுடைச் சாலே என்றது இங்குப் பாக சாலேயை)

17 உருமலரோன் தனக்கமைந்த ஊர்தியென அன்னமதைப்
பெருமறையோர் தாம்கொளாரோ? பிறகிடுதல் கண்டிலமால்
உருவின்மிகக் குழம்புமென்றே ஒண்நழுவு கறியமுதைத்
திருவாளர் தேடாரோ? திருவுடையீர் சாற்றுமினே.

(கருத்து) "யதீய சிகரசகதாம் சசிகலாம்" (ஸுந்தர பாஹுஸ் தவம்) என்ற ச்லோகத்தில் கூறப்பட்டதே போன்று பிரமனது வாகனம் என்று அன்னத்தை நாடார்களோ பரமனது அடியார்கள்? என்றதாகக் கொள்க. (அன்னம்—ஹம்ஸபக்ஷி, உணவு) இதுதானும் குழம்பி நம்மை யும் குழப்புமென்று நழுவு கறியமுதை அமுதுசெய்யாரோ? (செய்வர்கள்)

18 சீர்க்கடலே யங்கையிலே சிறுபொழுதிற் காட்டிடுவார்
அர்க்குமினிப் பருப்பதனை அன்னமிசைக் காட்டிடுவார்
பார்க்குமவர் மிக்வியப்பக் கனலமுதைப் பருகிடுவார்
பார்க்கப் பெருசாங்கிரியைப் பதினெடியே ஏந்திடுவார்.

(கருத்து) ததீயர் அமுது செய்வதைப்பற்றிச் சிலேடையாகச் சொன்னதாமிது எம்பெருமான் 'தம்மையே நாளும் வணங்கித் தொழு வார்க்குத் தம்மையே யொக்க அருள்செய்வர்' ஆதலால் அவன் செய்த அருஞ்செயல்களே அவனடியார்களும் செய்கின்றனர் என்றதாகக் கொள்க. (சீர்க்கடலே) முத்திலங்கு காரார் திண் கடலேழும் உண்டவ னன்றோ எம்பெருமான்! அவனடியாரும் சிறுபொழுதில் அருங்கடலே (கடலேப் பருப்பைக்)கையிலேந்தி உட்கொள்வர். ஹம்ஸாருடனை ஹஸ் திசைலேசனை ஸேவிக்கப் பண்ணுவர்கள். (ப்ரஸாதத்தின் மீது பருப் புமுதைக் கொள்வர்கள்) எம்பெருமான் க்ருஷ்ணவதாரத்தில் நெருப்பை

கணையாழியாகிய திருப்பவித்திரம் பொருந்தப் பெற்றவர் ஸ்ரீ ஸ்வாமி. ஆழியாகிய கடலில் புகுந்து நீர் கொண்டேறுவது முகில். ஆழியாகிய சக்கரங்கள் பொருந்தப் பெற்றது கார் (Car) (2) ஆர்த்த புகழாரியர் ஸ்ரீஸ்வாமி மிக்க பெரும் சவை நடுவே தத்வநிருபணம் செய்து இப் பார் முழுதும் புகழ்கொண்டு போர்த்து நம்போன்றோரிடையே புகுந்து அநகன் செய்ய தாளிணையோடு ஆர்த்தவரன்றே நம் ஸ்வாமி! ஆழியுள் புக்கு முகந்துகொடார்ப்பது மேகம், நெடுவீதியில் செல்லும்போது (ஆர்ப்பது) பேரொலி செய்வது Car என்க. (3) தோளோடிலங்கு மின்னுநூல் மார்பர் ஸ்ரீஸ்வாமி. மின்னுகத் தெழப்பெற்றவை மா முகில்கள். மின் (Battery) அடங்கப் பெற்றது car என்க, (4) மால் என்று கருமைக்கும் பெருமைக்கும் மையலுக்கும் வாசகமாதலால் அருமாலெய்தி அடி பரவுபவர் ஸ்ரீஸ்வாமி. கருமை நிறம் மிகப்பெற்றது மேகம். மிகவும் பெருமையுடையது (பெருவிலையுடையது) car என்க. (5) இவ்வுலகில் பிறப்பை ஹேயமென்று நினைப்பதை மாற்றி×அங்குப் போனால் தெள்ளியீர் இல்லையே× போன்ற திவ்ய ஸூக்திகளை யுணர்த்தி இவ்வுலகில் வாழ்ச்சியின் மதிப்பையுயர்த்துபவர் ஸ்ரீ ஸ்வாமி விசும் பின் துளி வீழினல்லால் பசும்புல்தலை காண்பதரிது ஆதலின் மேகம் பொழிந்தால்தான் உய்வு என்றபடி. காரை வைத்துக்கொண்டிருப்பது செல்வர்தம் மதிப்பைக் காட்டுமென்றது மூன்றுவது பொருள்.

(6) அமுதனாரமுதம் கமழ்திருவாயும் அலகிலஞ் சோதிசேர்வடிவும்
அமுதமென்னகையும் புகருடன் திகழும் அழகதாம் முப்புரி நூலும்
அமைவுடைக் குருவாய் அடியவர்க் கொளியாய் விளங்குமண்
ணங்கராரியர்தம்
அமுதமென் மொழியும் குமுதமென் மலரேய் நயனமும்
நெஞ்சகலாவே.

என்றபடியே தேசாரும் சீர்வடிவுடையவர் ஸ்ரீஸ்வாமி "கரும்பெரு மேகங்கள் காணில் கண்ணனென்றேறப் பறக்கும்" ஆதலினால் அடி யவரைக் கவர்வது மேகம். car அனைவரையும் கவர்வது அறிந்ததே.

16 செவியினிற் செஞ்சொலை யேற்ற பின்னரோ
அவியென அறுசுவை யடிசில் அன்புடன்

புவியினில் புனிதராம் தேவரும் நசைகொளச்
சவியுடைச் சாலையில் ததியர் ஏற்பரே.

(கருத்து) ஸ்ரீ ஸ்வாமி திருமாளிகையில் எம்பெருமான் கண்டருளும் இன்னடிசிலைத் ததியர் அமுது செய்கையில் பாற்கடலிற் கிளர்ந்த அமிழ்தினையுடைய தேவர்கள் தம்முடைய அமுதத்தினை மறந்து இவ்வமுதை வேண்டுவர் என்றதாயிற்று. பக்தாம்ருதம் அன்றோ இது. (சவியுடைச் சாலை என்றது இங்குப் பாக சாலையை)

17. உருமலரோன் தனக்கமைந்த ஊர்தியென அன்னமதைப்
பெருமறையோர் தாம்கொளாரோ? பிறகிடுதல் கண்டிலமால்
உருவின் மிகக் குழம்புமென்றே ஒண்நழுவு கறியமுதைத்
திருவாளர் தேடாரோ? திருவுடையீர் சாற்றுமினே.

(கருத்து) "யதீய சிகரசகதாம் சசிகலாம்" (ஸுந்தர பாஹுஸ்தவம்) என்ற ச்லோகத்தில் கூறப்பட்டதே போன்று பிரமனது வாகனம் என்று அன்னத்தை நாடார்களோ பரமனது அடியார்கள்? என்றதாகக் கொள்க. (அன்னம்—ஹம்ஸபக்ஷி, உணவு) இதுதானும் குழம்பி நம்மையும் குழப்புமென்று நழுவு கறியமுதை அமுதுசெய்யாரோ? (செய்வர்கள்)

18 சீர்க்கடலை யங்கையிலே சிறுபொழுதிற் காட்டிடுவார்
ஆர்க்குமினிப் பருப்பதனை அன்னமிசைக் காட்டிடுவார்
பார்க்குமவர் மிக்வியப்பக் கனலமுதைப் பருகிடுவார்
பார்க்கப் பெருசாங்கிரியைப் பதினெடியே ஏந்திடுவார்.

(கருத்து) ததியர் அமுது செய்வதைப்பற்றிச் சிலேடையாகச் சொன்னதாமிது. எம்பெருமான் 'தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே யொக்க அருள்செய்வர்' ஆதலால் அவன் செய்த அருஞ்செயல்களை அவனடியார்களும் செய்கின்றனர் என்றதாகக் கொள்க. (சீர்க்கடலை) முத்திலங்கு காரார் திண் கடலேழும் உண்டவனன்றோ எம்பெருமான்! அவனடியாரும் சிறுபொழுதில் அருங்கடலை (கடலைப் பருப்பைக்)கையிலேந்தி உட்கொள்வர். ஹம்ஸாரூடனை ஹஸ்திசைலேசனை ஸேவிக்கப் பண்ணுவர்கள். (ப்ரஸாதத்தின் மீது பருப்புமுதைக் கொள்வர்கள்) எம்பெருமான் க்ருஷ்ணாவதாரத்தில் நெருப்பை

விழுங்கிய வரலாறு ப்ரஸித்தம். அதுபோன்று ததீயரும் கனலை (நெருப்பை)ப் பருகுவர். திருக்கன்னலமுதினை ஏற்பர்கள் என்றவாறு. கண்ணனெம்பெருமான் கிரிதரனாய் நின்றதுபோல் இவர்களும் பெரி சாங்கிரியை (பெரிய மலையை) விரைவில் ஏந்துவர்கள். ஜாங்கிரி என்னும் திருப்பணியாரத்தை யமுது செய்வர் என்றவாறு.

19 சங்கமந்தனிலே செல்வன் செவ்வியன் பரதனுக்காய்
அங்கமைத்திடுமோர் நல்ல அற்புத விருந்துதானோ?
பங்கயமன்ன கண்ணன் பதிதனக் குறவாரோடும்
தங்கியபோழ்து நல்கும் தனிப்பெரு விருந்தேயாமோ?

சங்கமம்—ப்ரயாகை செல்வன் – தவச் செல்வன்

(கருத்து) இராமன் வனம்புக்கதறிந்து பான்மொழிப் பரதநம்பி 'எங்குற்ருயெம்பெருமான்' என்று நாடிச்சென்று பக்தியுடைக்குகனைக் கண்டு அவனும் பெருஞ்சேனையும் சூழ இலைச்வேய் குரம்பையில் தவ மாமுனியாம் பரத்வாசரை வணங்கினன், அப்போது அனைவர்க்கும் அருந்தவத்தின் வலிமையால் ஒப்பற்றவிருந்தை முனிவன் அளித்தனன் என்பது ப்ரஸித்தம். இனி எம்பெருமான் மின்னிடைச்சீதை பொருட்டாத் தென்னிலங்கையரண் சிதறியவுனன் பொன்முடிகள் பத்தும் புரளச் சரந் துரந்து செல்வவிபீடணனை மன்னனாக்கிக் கவியரசோடும் மற்றுளாரோடும் அம்பொனெடு மணிமாட வயோத்தியெய்துகையில் வழியிடையில் பரத்வாஜாச்ரமத்தே அவர் அளித்த விருந்தை ஏற்றமையும் அனைவரும் அறிந்ததே. வால்மீகி ராமாயணத்தில் அயோத்யா, யுத்த காண்டங்களில் விளக்கங்காணலாம். ஸ்ரீ ஸ்வாமி திருமாளிகையில் நிகழும் ததீயாராதனமும் அத்தன்மைத்தே என்றவாரும்.

20 அருந்துவரை மேவிடுவான் அரும்பாகம் தனையளிப்பான்
பொருந்தவரை யாதரிப்பான் பல்கலனும் தானுடையான்
மருந்தெனவே யாகாதோ மாசறு நல்லுள்ளத்தீர்
அரங்க நன்னுதனுமே தான் அனைவரையும் அளிப்பானேல்!

(கருத்து) ததீயாராதனையைத் திறம்பட நிர்வஹித்த ஸ்ரீ ஸ்வாமி திருக்குமாரரை Stage director உடனும் எம்பெருமானுடனும்

ஒப்பிட்டுப் பேசுவதிதுவென்க. எம்பெருமான் கண்ணன் சத்துருக்கள் புகுதற்கரிய (அருந்துவரை) த்வாரகா நகரை மேவியவனன்றே! ஸ்ரீ ஸ்வாமி திருக்குமாரர் அரிய துவரையைச் (பருப்புவகை) சேர்த்து அமுதினைப் பரிமளிக்கச் செய்வதாக்கொள்க. இனி Stage director தாம் தமது நன் முயற்சியை விரைவில் வெளிக்கொணர்தல் வேண்டும் என்று துவரை (த்வரா) யுடையராயிருத்தல் இயல்பேயாம் என்க. (2) எம் பெருமான் (அரும் பாகம்) பல்வேறு தெய்வங்களைத் தோற்றி அவ்வவ தெய்வங்கட்குரிய கடமைகளையும் உணர்த்தியருள்வன் அன்றே. அல்லது (அரும்பு ஆகம்) ''மணிமிகு மார்வினில் குருமாமணியாய் அணையும் வஸ்து'' என்கிறபடியே சுவை யரும்பு தன் ஆகத்தை (திருமார்வினை) அடியார்கட்கு அளிப்பவன் என்னும் பொருளும் கொளத் தக்கது. ப்ரக்ருத ஸ்வாமி இன்னின்னவை இன்ன வகையில் அமைய வேணும் என்று தக்கோர்க்கு அறிவித்து அருமையான பாகம் அமையுமாறு செய்பவர் என்றொரு பொருள் காண்க இனி டைரக்டர் என்னும் பொருள் கொண்டால் நடிகர்களுக்கு அவரவர்க்குத் தக்க பாகங்களை (வேடங்களை) அளிப்பவர் என்று கொள்க. (3) (பொருந்த வரை யாதரிப்பாண்) எம் பெருமான் தான் பொருந்தி உறைதற்கு மலைகளை நாடுவன் என்றபடி. திருமலை, திருமாலிருஞ்சோலைமலை, திருநீர்மலை என்றிப்படிப் பல மலைகளை யுடையவன் என்க இனி, பொருந்த அவரை யாதரிப்பான் என்று பிரித்து, ஸ்ரீவைஷ்ணவத்துக்குச் சேரத் ததீயரை ஆதரிப்பவர் என்ற பொருளும், (டைரக்டர் பரமாக) பல்வேறு கோணங்களில் ஆராய்ந்து எல்லாம் பொருந்துமவர்களையே ஏற்பவர் என்ற பொருளும் காண்க. (4) மின்னு நீண்முடியாரம் பல்கலன் தானுடையன் எம்பெருமான் ததீயாராதனைக் கேற்ற கலங்கள் பல உடையவர் என்று இரண்டாவதான பொருளும் நாடகத்தை நிகழ்த்துதற்குப் பற்பல களன்களை உடையவர் என்று மூன்றாவதான பொருளும் காண்க. இனி, எம்பெருமான் திருவரங்கநாதன் தன் பெருங்கருணையினால் அனைவர்க்கும் அருள் செய்தால் அவ்வருளே நமது வல்வினைகட்கு மருந்தாமென்றது. இனி ஸ்ரீ ஸ்வாமி திருக்குமாரர் ரங்கநாத சர்மந் கொண்டவராகையாலே அவர் அளிப்பது (மருந்து) அமிழ்துபோல் அமையுமன்றோ என்றவாறு. இனி அரங்கநாதன் என்பது நாட்ய ரங்கத்தின் தலைவனைக் குறிக்குமாதலின்

அந்த டைரக்டருடைய படைப்பு மனக்கவலைகட்கு ஒரு மருந்தாய் அமையும் (சற்றுநேரம் கவலைகளை மறக்க ஏதுவாகும்) என்றபடி.

**21** ஆராவமு தெனவேயனு தினந்தான் அருங்கலையை
ஆராவமுதெனும் தேவனும் ஆர்வத்தொடு கேட்கப்
பாராயணம்செயும் பண்பினர் பார்வைக் கிலக்கானல்
ஆராவமு தாயேயது வாதல் வியப்பன்றால்.

(கருத்து) எம்பெருமான் ஸ்தவப்ரியன் அத்தியூரான் அருளிச் செயலில் பெருவிருப்புடையன். அவன் உகந்து திருச்செவி சாற்றும்படி (அமுதனுக்கும் அமுதாகுமாறு) மதுர கண்டத்தால் திவ்யப்ரபந்தத்தைத் தினமும் இசைக்கும் திருவருள் பெற்றவர்தம் நோக்கத்துக்கிலக்காகு மவை தொண்டர்க்கு அமுதென்ன அமைவதில் வியப்படையவொன்று மில்லை யென்றவாறு.

**22** மற்றுமோ ரமுதுமுண்டு மாந்திடச் செப்புகின்றேன்
கற்றமாயுணரும் சீலன் சூரியர்பதி மாவேந்தன்
நற்றவத்தந்தை காப்போன் நாதனுமாவன் மேலும்
மற்றுள பந்தமெல்லாம் மாறியும் கொள்க என்றார்.

(கருத்து) ஸ்ரீ ஸ்வாமியின் மீன விசாகோத்ஸவத்தில் வித்வான்களின் உபந்யாஸம் தவறாது நிகழ்வதொன்றும். செவி, வாய், கண், மூக்குடலென்றைம்புலனும் வகுத்த விஷயத்தைப் பெறக்கடவதோர் உத்ஸவமிது! இவ்வாண்டைய உபந்யாஸத்தின் விசேஷம் கேளீர். சேதனனுக்கும் பரம சேதனனுக்கும் ஒன்பது வகையான ஸம்பந்தமுண்டு என்றறிக. ×பிதா ச ரக்ஷக: சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி:. ஸ்வாம்யாதாரோ மமாத்மா ச போக்தா சாத்ய மநூதித:× என்ற ச்லோகத்தில் இவ்வுறவுகள் உணர்த்தப் பட்டனவாம். அதாவது திருமால் (1) அத்தனையும், (2) உகந்தோறுயிர்கள் காப்பானையும், (3) தலைவனெங்கோமானையும், (4) பர்த்தாவாயும் (5) "தாமரையாள் கேள்வனொருவனையே நோக்கும் உணர்வு" "த்யேயஸ் ஸதா ஸவித்ரு மண்டல மத்ய வர்த்தீ நாராயண:" எனறபடி அறியப்படுமவனையும் (6) ஸ்வாமியாயும் (7) ×த்யௌ: ஸ சந்த்ரார்க்க நக்ஷத்ரா கந் திசோபூர் மஹோ ததி: வாஸுதேவஸ்ய வீர்யேண வித்ருதாநி× என்றதுபோல் யாவற்

றுக்கும் ஆதாரபூதனாயும் (8) ''யஸ்ய ப்ருதிவீ சரீரம்'' இத்யாதிகளிற் படியே ஸகல சேதநா சேதநங்கட்கும் ஆத்மாவாயும் (9) ''போக்தாரம் யஜ்ஞ தபஸாம் ×அஹம் ஹி ஸர்வ யஜ்ஞாநாம் போக்தா× இத்யாதி களிற் பகரப்பட்டபடிபோக்தாவாயும் உள்ளவன் என்பது திருமந்த்ரார்த் தம் என்றதாயிற்று. இவ்வுறவு முறையினை மாறியும் கொள்ளலாம் என்று ஸ்ரீ ஸ்வாமி ஸாதித்து அவற்றை உபந்யாஸங்களால் விளக்கு மாறு திருவுளங்கொண்டார். அதாவது எம்பெருமானைப் பிதாவாகமட்டு மன்றிப் புத்ரனாகவும் சாஸ்த்ரம் காட்டியுள்ளது, ரக்ஷகனை மட்டுமன்று ரக்ஷ்யனாகவும் (காப்பாற்றப் படுபவன்) காண்கின்றோம் என்று இவ் வகையில் உபந்யாஸம் நிகழத் திருவுளங்கொண்டார். (1) அவ்யய பிதாவான ஸர்வேச்வரன் புத்ரனுமாறு யாங்ஙனெனின், கேண்மின்;—: மகனொருவர்க்கல்லாத மாமேனி மாயனேயவன். ஆகிலும் தன் திரு வாக்கினால் ''ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்'' என்று தன்னைத் தசரத நந்தனனாகச் சொல்லிப் பெருமை கொண்டனன். இவ் வண்ணமே நந்தன் மகனாகவும் கச்யப ஸூநுவாகவும் தோன்றினமை நோக்கத் தக்கது (2) ஸர்வரக்ஷகன் ரக்ஷ்யனுமாற்றை மங்களாசாஸன பரர் பக்கலிலே காணலாம். ''காப்பாருமில்லை கடல்வண்ணனுனை'' ''வாளும் வில்லுங் கொண்டு பின்செல்வார் மற்றில்லை'' இத்யாதி காண்க (3) கழுத்திலே ஓலை கட்டிக்கொண்டு தூது நடந்ததனையும் வெள்ளைப் புரவிக் குரக்கு வெல்கொடி விசயன் தேர் முன் பற்றலர் வீயக் கோல்கையில் கொண்டு நின்றதனால் சேஷத்வம் வ்யக்தம். (4)×சேலேய் கண்ணியரும் × மாதா பிதா யுவதய:× இத்யாதிகள் (5) ×அஹம் ஸ்மராமி' மத்பக்தம் × என்னை நீ குறிக்கொள்ளே இத்யாதிகள் (6) ×ஸ்வஸ்வாமி பாவத்தை மாருடிக்கொண்டு அஜ்ஞரைப் போலே யும் அசக்தரைப் போலேயும் அஸ்வதந்த்ரரைப் போலேயும் இருக்கச் செய்தேயும் அபார காருண்ய பரவசனாய்க் கொண்டு ஸ்வாபேக்ஷிதங் களையும் கொடுத்தருளும்×(தத்வத்ரயம்)(7)''நாரணனே நீ என்னையன்றி யில்லை'' என்றது காண்க, மேலும் முமுக்ஷுப்படியில் திருமந்த்ர ப்ரகர ணத்தில் ''அயந மென்றது இவற்றுக்கு ஆச்ரயமென்றபடி அன்றிக்கே இவை தன்னை ஆச்ரயமாக வுடையவன் என்னவுமாம்'' என்றருளிச் செய்யப்பட்டிருப்பதும் காண்க (8) ''அறிவாருயிரானாய்'' ×ஜ்ஞாநீ துஆத்மைவ மே மதம்× இத்யாதிகள், (9) ×அஹமந்நாத: × ஸோச்

நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபச்சிதா" இத்யாதிகள் (பிறிதொருகால் இவற்றின் விளக்கம் வெளிவரும்):

23 முதலதாம் உறவு தன்னை மூதலித் தவர் சீரங்கப்
பதிதனில் வாழு மன்பர் பார்மிசை யாரும்வாழ
நிதியென நற்பொருள்கள் நித்தமும் சிந்திடத்தான்
மதிநலம் வாய்க்கப் பெற்ற மாசறுங் கேள்வியாரே.

(கருத்து) எம்பெருமான் புத்ரன் என்பதை மூதலித்தவர் ஸ்ரீ உ.வே. கோயில் சதாபிஷேகம் தி அ. கோவிந்த நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி என்றவாறு.

24 ஆரியம் அருந்தமிழ்நல் அளவையாம் சாத்திரந்தான்
ஆரியர் அருளும் செஞ்சொல் அவையெலா மடங்குளத்தோர்
ஆருயிர்நாதனை காக்கப் படுமவன் எனவுரைத்தார்
ஆரியம்புதல் செய்கிற்பார் அன்னவர் உரைத்தவாறே

(கருத்து) ஸ்ரீமான் உ வே. தி. அ க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி எம்பெருமான் ரக்ஷ்யனென்பதை விவரித்தருளினர். (இடையில் பெருமாள் உத்ஸவங்கள் நிகழ்ந்தபடியால் இத்தொடர் உபந்யாஸம் ஸ்ரீ ஸ்வாமியாலேயே ஒருவாறு பூர்த்தி செய்யப்பட்டது)

25 பங்குனிவிசாக நன்னாள் பாரினில்கண்ட வந்நாள்
பங்கயமாது போற்றும் பான்மையன் பாசுரத்தைச்
சங்கையில் தூயவர்தாம் சதிருடன் இசைத்தபோழ்து
செங்கையின் சீர்கொள்மாலை சீரியர் ஏந்திவந்தார்.

(கருத்து) பங்குனி விசாகத்தன்று காலை கோஷ்டியில் இராமாநுச நூற்றந்தாதியில் 'தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப் பூண்டவன்பாளன்' என்று ஸேவிக்கும்போது தென்னத்தியூரர் ஸன்னிதி அர்ச்சகர் ஸ்ரீ உ.வே. ஸ்ரீ பாஞ்சராத்ரம் வரதாஜபட்டர் ஸ்வாமி எம்பெருமானது சூடிக் களைந்த மாலையை நல்கி "எம்பெருமானும் இன்று திருமாலையும் தெய்வ நன்மாலையும் (பெரிய திருமொழி) அணிந்தருள்கிறுன்" என்று ஸாதித்தார்.

26 பற்பல வூரினின்றும் போதரும் புண்ணியர்கள்
பற்பல வாகவேதான் பார்மிசை புகழ்ந்துரைத்தார்
சொற்பல வாகிலென்றுன்? சொலப்படு பொருளுமொன்றே
நற்பலவுரையாளர்க்கே நன்மையும் செய்வ ரென்றூர்

(கருத்து) ஸ்ரீமான்கள் வித்வான்கள் கபிஸ்தலம் ப்ர.ரங்காசரியர், ப்ர.கண்ணமாசாரியர் ஸ்வாமி R.V சேஷாத்ரியாசாரியர், T.A.V.வரதா சாரியர் போன்ற பலர் ஸ்ரீஸ்வாமியின் பெருமையை பஹுமுகமாக அநுபவித்தனர். எல்லோருடைய அபிப்ராயமும் ஒன்றே அதாவது ஆயிரத்துக்கும் மேற்பட்ட ஸ்ரீ ஸ்வாமியின் நூல்கள் உபந்யாஸகர்களுக்கு மாபெரும் சேமவைப்பென்பதே.

27 வார்த்தையும் பேசிடத்தான் வருவதேயில்லை சீயம்
மூர்த்திகளிருவரையும் மூதுணர் வொடுமே போற்றும்
சீர்த்தி சேரன்னங்கள்தாம் சீர்கொளண் ணங்கரென்னும்
தீர்த்தரை நாடிவந்து தீர்த்தனர் தாபமெல்லாம்.

(கருத்து) இம் மஹோத்ஸவ வைபவங்களுக்குச் சிகரம் வைத்தாற்போன்று அமைந்ததொன்று கேண்மின். "மாயா கேஸரி" எனப்பட்ட திருவேங்கடத் தெம்பெருமானையும் யதிஸார்வ பௌமஹரி" "வலி மிக்க சீயம்" எனப்பட்ட எம்பெருமானுரையும் கைங்கர்யத்தால் மகிழ்விக்கும் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி கோவிந்த ராஜ ராமாநுஜ சின்ன ஜீயர் ஸ்வாமியும் ஸ்ரீபெரும்பூதூர் யதிராஜ ஜீயர் ஸ்வாமியும் சாற்றுமுறை கோஷ்டியை அலங்கரித்தது வாசாம கோசரம்.

(ஹம்ஸங்கள் அள்ளலில் ரதியின்றி தீர்த்தத்தை நாடுதல் இயல்பு பரம ஹம்ஸங்கள் தீர்த்த (பூஜ்யர்) ிருக்குமிடம் எழுந்தருளினது சாலவும் ஒக்கும் மாயா கேஸரியும் யதிஸார்வபௌமஹரியும் ப்ரதிவாதி பயங்கரஸிம்ஹரை யநுக்ரஹித்தவிது சாலப் பொருத்த முடைத்தே.

நிறைவுரை:— ஒரு பொருளல்லேன் இருவினையுடையேன் மூதறிவாளர் முதல்வர்தம் விழாவினைப்பற்றி யெழுதுவது நானிலம் நகைக்க இடமென்பதில் ஐயமில்லை. ஆகிலும் அடியேன் உய்யுமாறெழுதவெண்ணித் துணிந்து தொண்டு பூண்டேன். எம்பெருமானைப் பற்றினுர்க்குத் தளை விலகும், சீர் பிரியாதிருக்கும் என்பது உண்மையுரையே. (அடியேனுடைய கவிதை (?) யில் தளைதட்டுவதும், சீர் பிரியாமல் தண்டாகாரமாக இருப்பதும் ஸஹஜமே என்றபடி).

— நித்யஸ்ரீர் நித்ய மங்களம் —

## P B. அண்ணங்கராசார்யஸ்வாமிகளின் நூல் துறைகள்

1 நாலாயிர திவ்யப்ரபந்த வுரைகள்
2 பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3 ஸகலபூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4 ஆழ்வாராசார்யப்பிரபாவ நூல்கள்
5 இதிஹாஸபுராணசரித்திர ,,
6 ரஹஸ்யார்த்த விளக்க ,,
7 வேதாந்தப் பொருள் விளக்க ,,
8 ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9 வேதவிசாரலக்ஷண நூல்கள்
10 லோகாபிராம உபந்யாஸ ,,
11 பரபக்ஷப்ரதிக்ஷேப ,,
12 உபந்யாஸக ஸௌபாக்ய ,,
13 வடமொழி நூல்திரள்கள் ,,
14 ஹிந்தி பாஷையில் நூல்கள்
15 தெலுங்கு பாஷையில் ,,
16 பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்

விரிவான ஜாபிதாக்கள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப் பணம் M, O. செய்பவர்கள்

**P. B ANNANGARACHRYA,**
Editor, Granthamala, Kancheepuram-631503
என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
Kancheepuram Pin Code-631503



and Printed by F. Devarajan at Sri Kamakshi Press
44-a, Thirukatchinambi Street, Kancheepuram.631503